உ
சிவமயம்.
திருசிற்றம்பலம்.

# தியாநாநந்தந் திகழுமிடமெது?

தியாநமாவது கடவுளுடைய அந்த கல்யாணகுண விசிஷ்டங் களையும், சர்வகாரண சர்வஜ்ஞுத்துவங்களையும் மெய்யறிவானே தெளிந்து, மனதை அப்பெருமானுடைய திருவடிகளிலே நிறுத்துதல். மனதை நிறுத்திவழிபடுவோர் அகக்கண்ணாகிய ஞானக் கண்ணிணாலே ஈஸ்வரஸ்வரூபத்தைத் தரிசித்து ஆநந்தமடைகின்றனர். ஊனக் கண்கொண்டு காண்டல் முடியாத வொன்றேயன்றி, இறைவனருள் காட்டு மியற்கைபூண்ட இம்மாநுஷ்ய தேகபலமும் வியர்த்தமாகும், ஆகலின், மனித தேகமகத்துவத்தை யறிந்து அறிவினை விகஸிக்கச் செய்தால், அவ்வறிவின் பேரொளியாகிய பதியை அறிந்து கதியடைதல் கூடும்.

"ஊனக்கண்பாச முணரா துயிர்க்குயிரை
ஞானக்கண் ணாலுண்ணாம்."

சத்த, ஸ்பரிஸ, ரூப, ரஸ கந்தங்களாகிய தன்மாத்திரைகளின் வழியே மனஸை நிறுத்தாது வழிபட்டாலன்றிப் பரப்பிர்மத்தையறி தல் கூடாது. இதனாலே தான் மேதாவியர்களின் மனம் கடவுளிடத் தன்றிப் பிறிதொரு பொருளிடத்துஞ் செல்லாது அடக்கப்பட்டிருந்ததாகத் தெரியவருகின்றது. தியாநஞ் செய்பவன் ஆன்மா, தியாநஞ் செயப்படுவர் கடவுளாகிய பதி, தியாகத்தினாலே அடையும்பேறு ஆநந்தம். இவ்வுயர் நிலையையடைதற்கு இப்பிறவியிலே இலகுவாகச்'செய்யும் புறவழிபாட்டையும், அதுவே நெறியாக அகவழிபாட்டை யும் இவற்றின் முகிழ்ப்பானே சீவன் சிவனாதலையும் முறையே அறிக,

ஹிருதயஸ்தானத்திலே தீபவொளி யென்னவிளங்கும் சாத்து விகஸ்படிகனாகிய ஆன்மாவைத் தத்துவங்களினின்றும் (நேதிகளை ந்து) வேறு பிரித்து, சிவபெருமானுடைய திருவருளாகிய சத்தியி னாலே ஞாநத்தைப் பெருக்கி, அந்த ஞான வொளியினுள்ளே பிரகா சிக்கும் சுத்த சிவவொளியை மலினமின்றித் துலங்கச் செய்து அந்த ஞாநவொளி முதல்வராகிய சிவபெருமானின் றிவ்விய திருவடிப்பேறே ஞாநத்தாலடையும் பெரும்பேறாகும்.

"விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்க வல்லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே."

இவ்வரிய பாசுரத்திலே "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்பதன் பொருள் தொனித் தலையும் அறிஞர்கள் சிந்திப்பார்களாக,

## தியாநாநந்தந் திகழுமிடமெது?

நிற்க, உபாஸகனாகிய ஆன்பா உள் பொருளா இல்பொருளா என்னில், ஆத்மா எப்பொழுது முள்ளதேயாமென்க. ஆனால் ஜீவாதம குணத்துள் எதையாவது தாம் பின்பற்றாது, தம்மையே இவ்வாதமா சேர்ந்து உய்வடைந்து ஈடேறும்படி செய்பவரே கடவுள். அக்கடவுளையே பரமாத்மா என்று கூறப்படுகின்றது. பரமாத்மா என்ற நாமோச்சாரணமே ஜீவாத்மாவின் குறைவுபாட்டை வெளிப்படுத்துகின்றது. ஜீவாத்மா தேகத்தைவிட்டால் ஈசனையடைதல் கூடாது. ஆகலின், தேகத்தின் கட்படுத்தி வினைகளைச் செய்து வினைப்பயனின் மேம்பாடு பற்றி அறிவின் றெளிவு கொண்ட இம்மாநுஷ்ய சட்டையைப் பெறும் பொருட்டு, ஆன்மாவுக்கு அருட்சத்தியை அநுட்டித்து நின்று ஆஜ்ஞைகொடுத்தருளியவர் பரமகருணாகரக்கடவுளே. அவரை மாநுஷ்யர்கள் மனதினாலே சிந்தித்தலும், வாக்கினாலே வந்தித்தலும், காயத்தினாலே வணங்குதலும் என்ற இவைகளை ஏற்றபடி நாடோறுந் தவறாது செய்து வந்தால் மேற்கூறிய தியாநாநந்தநிலை சுலபமாகக்கிட்டும். அந்நிலையே அரனிலையாகும். அதாவது இடா பிங்கலா நாடிகளை அடைத்துப் பிராணவாயுவைச் சுழுமுனா நாடியின் வழியே நிறுத்தவேண்டும். இப்படிச் சூரிய கலையோடு சந்திர கலையையும் அடக்கின்ற அவசரமே அந்த வுயர்வு பெற்ற இடமாகும். இதனையே திராவிட நூலுள் "இராப்பக லற்றவிடத்தே யிருக்கை யெளிதல்லவே" என்று கூறப்பெற்றுள்ளமை காண்க.

வடமொழி நூலுள்ளும்,

நதிநெபூஜயெத்தேவவராத்ரௌகைவசகைவச
ஸம்ததம் பூஜயெத்தேவம் திவாராத்ரௌசவர்ஜயேத்

இதன் கருத்து: சிவபெருமானைப் பகலினும் இரவினும் பூசை செய்யற்க, பகல் இரவு ஒழித்துச் சிவபெருமானை எப்பொழுதும் பூஜிக்க என்பதாம். இதுவே உண்மை நூல்களின்றுணிபு. சிவாகமவுணர்ச்சி யுடையார்க்கும் இது புலப்படும். (நீலகண்டபாஷியம் பார்க்க.) -

இன்னும், மாசற்ற நெஞ்சர்களாகி மகாதொண்டர்களுடைய ஹிருதய கமலத்தினிடத்தே சுத்தமாகப் பிரகாசிக்கும் மேலான ஸ்தாணுவாகிய ஜோதிஸ்வரூபராகும் சிவபெருமானுக்கு உதயாஸ்த மயனங்களின்மையினாலே பகல் இரவு என்ற பேதத்தை உண்டாகக் காணாது நித்தமுஞ்செயற் பாலனவாய விரதாதிகளையும் விட்டுச் சதாநந்த பரிதர்களான விஞ்சையர்கள் பலருளர், இந்நற் பெருமையே பெருமை. இந்த உயர்ச்சியே உயர்ச்சி. தபத்தையாண்டு அவத்தையொழித்து நடப்பதற்கான பஞ்சாக்ஷர மஹாமந்தியப் பொருளாகிய இறைவனை இப்படியே உபாசித்து அடைவதே அறிவின் முறைமை. இந்தத்தேகமே சிவஸ்வரூபமாகும். ஒருமானுஷ்யனைப் பார்த்தால் மேற்கதியே அவனிடத்துள்ளது. வடிவம் பிபணவமே. இவைகளைப் பிர்ம்மஜ்ஞாநியேயறிவார். வாக்கும நாதீததமான பொருள் ஏடணை வழியானே யுழலும் எழைகளுக்கு அரியதேயாம். மோ ஹமற்றதே மோக்ஷம்.

"கரவிலுள்ள மாம் விசும்பிடைக்காசற விளக்கும்
பரசிலாச்சுடர்க் குதயமீறின்மை யாற்பகலு
மிரவுநேர்படக் கண்டிலரியன்று செய்தித்த
விரதமாதிநோன் பிழந்துறைவிஞ்சையர் பலரால்."

(திருவிளை: வாதவூரடிகள் உபதேசம், 33.)

"அகலமா மாகாயத்தி னமர்ந்ததோர் ஞானாதித்தன், விகலமா யுதியானத்த மேவிடான் சந்திதன்னை, யிகலற வியற்லுமாற தெங்ஙன. மென்றெண்றெண்ணி, முகில்சொரி நீத்தமின்றி முடித்து நீ சந்தி யெல்லாம்" (தசகாரியம்)

"எனைநா னென்பதறியேன் பகலிரவா வதுமறியேன், மனவா சகங்கடந்தா னெனை மத்தோன் மத்தனாகிச், சினமால் விடையுடை யான் மன்னு திருப் பெருந்துறையுறையும், பனவ னெனைச் செய்த படிறறியேன் பரஞ்சுடரே". (திருவாசகம்)

இனி, நித்திரையுற்றான் கைப்பொருளென்ன இயமநியமங்க ளொழியவேண்டும். நான் என்னும் அகங்காரத்தினால் நிரயப்பேறுண்டாகும். விரதாதிகளை அறுட்டித்து, நீங்கும் ஞான்று உணராது தானே நீங்கவிடுவது ஞானிகளிலக்ஷணம். இதனையே, "விரதமெலாம்மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்" என்றுதெய்வத் திருநெறித் தமிழ் வேதமுடையாரும் திருவாய்மலர்ந்தருளினார். வாதாடும் வன்கண்ணர்க்கு வளர்மதியூட்டல் வள்ளலாகிய தியாகராஜப்பெருமான் றிருவருளின் பாலமைந்ததாகும்.

## (உபசங்காரம்)

அன்பர்களே! இதுவரையினும் கூறிப்போந்தவற்றான் தியாநமாவது இது என்பதூஉம், தியாநிக்கப்படுபவர் இவர் என்பதூஉம், தியாநிப்போன் இவன் என்பதூஉம், தியாநப்பேறு ஆநந்தமே யென்பதூஉம், ஆநந்தத்தின் மேலே யாதுமின் றென்பதூஉம், இந்தவுண்மைகளை யுணர்ந்து சிவஞாநசா தரமான தியாகத்தை வழுவறப் புரிந்து மோக்ஷம் பெறவேண்டி, வேண்டியன வேண்டுவார்க்கீயும் விமலனை பாசிக்கவேண்டும் என்பதூஉம், அங்ஙனம் உபாலிப்பார்க்குங் சுழுமுநாநாடி ஸ்தானமே உன்னத ஸ்தானமாகும் என்பதூஉம், இவற்றையேயாவரும் பெறப் பிரார்த்தித்தலாவவியகமாகும் என்பதூஉம், சரியாபாதம் கிரியாபாதங்களிலுள்ள செயல்களைத் தவறாது செய்து வருதல் வேண்டும் என்பதுஉம் பிறவும் சுருக்கிவிளக்கப்பெற்ற வா றுணர்க. அன்றி, தியாநாநந்தந் திகழுமிடம் எது என்பதற்கு இராப்பகலற்றவிடம் என்பது மறுமொழியாகச் சம்பூர்ணமடைதலையும் நோக்குக்.

யாழ்ப்பாணம்: வ. மு. இரத்திநேசுவரையர்,
தமிழ்ப்பண்டிதர் ஞாநப்பிரகாச சபை,
புதுவாயல், இந்தியா

சித்தாந்தம் - 1916 ஹு - பிப்ரவரி மீ